# கருத்துப் போட்டி எண்-10 முடிவு

"கொலை வாரண்ட்!" சித்திரக் கதை கருத்துப் போட்டியில் கலந்து கொண்ட வாசகர்கள் அனைவருக்கும் எங்கள் பாராட்டுகள்!

மிகச் சிறந்த கருத்தை அனுப்பியவர் என்று தேர்ந்து எடுக்கப்பட்டு, அதற்காக ரூ. 50 பரிசு பெறுபவர்:—

பி. எம். கலிபுல்லா,
அல்–அமீன் எத்தீம் கானு,
கொடிக்குளம்,
கே. புதூர் போஸ்ட்,
மதுரை–7.

அவரது கருத்து வருமாறு:—

"கொலை வாரண்ட்!" போர்க் கதையில், கதாநாயகன் உட்ரோ ஒரு கோழை. ஆனால் மேலும் மேலும் பதவி உயர்வு அடைய வேண்டும் என்ற பேராசை கொண்டவர். தனது அந்த "லட்சிய"த்தை அடைய அவர் குறுக்கு வழியில் செல்கிறார்.

எதிர்கால ஆபத்தை முன்கூட்டி கூறும் பாட்டரின் அமானுஷ்ய சக்தியை பயன்படுத்தி, சார்ஜென்ட் வெனார்ட் உயிர் கொடுத்து ஈட்டிய வெற்றியை தன் வெற்றி ஆக்கி, கேப்டன் பதவியை அடைகிறார்.

தன்னை சந்தேகித்த ரூபியை கண்ணி வெடி மூலம் தகர்த்தெறிகிறார். கடைசியில், தன் உயர்வுக்கும் புகழுக்கும் காரணகர்த்தாவாக இருந்த பாட்டரையே கொலை செய்துவிடுகிறார். அப்போது பார்ட்டர், "என் கதிதான் உனக்கும்! நான் ரெயிலில் முதல் பெட்டி என்றால், நீ இரண்டாவது பெட்டி!" என்று "சாபம்" கொடுக்கிறான். அதன்படி உட்ரோ ரெயிலில் அடிபட்டு சாகும் இடமே என் மனதில் நின்ற கட்டமாகும்.

வினை விதைத்தவன் வினை அறுப்பான் என்பது போல், பிறருக்கு தீங்கு செய்பவன், அதற்கான பலனை பின்னால் தானே பெறுவான் என்ற கருத்தைத் தாங்கிய

பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தானே வரும்

—என்ற பொய்யாமொழிப் புலவரின் கூற்றை மெய்பித்துக் காட்டும் நல்ல படிப்பினை கட்டமாக அமைந்ததே, அந்த கட்டம் என் நெஞ்சில் தஞ்சம் புகுந்ததில் வியப்பு இல்லை. நன்றி."

ராணி காமிக்ஸ்—20
(மாதம் இருமுறை இதழ்)

TV

ஏப்ரல் 15—30,
1985



2 பேர் சேர்ந்து இழுத்தும் அதைத் தூக்குவது கடினமாக இருந்தது.

டேய் டான்! அது மீன் இல்லை!

ஆமாம்டா! மனுசன்!

அந்த உடலை 2 பேரும் சேர்ந்து கஷ்டப்பட்டு கரையில் போட்டனர்.

உயிர் இருக்கா? ஆச்சரியமா இருக்கே!

செயற்கை சுவாசம் செய்கிறேன். நீ போய் திம்ஸ் மாமாவிடம் சொல்!

நிக் ஓடிச் சென்று டாக்டரான மிஸ்டர் திம்சை அழைத்தான்.

திம்ஸ்! மாமா! ஆற்றில் ஒரு ஆள் உடலை கண்டெடுத்தோம். உயிர் இருக்கு'

அவரை இங்கே கொண்டு வந்து சிகிச்சை அளிப்போம்! உடல் விறைத்துப் போய் இருக்கும்!

சில மணி நேரம் கழித்து...

நான் எங்கே இருக்கேன்?

என் பெயர் திம்ஸ். இந்த மாணவர்கள் நிக்கும், டானும் உங்களை ஆற்றில் கண்டு எடுத்தனர்!


ஆறு? ஆமா! நினைவு இருக்கு! இந்த நாட்டை ஆள நினைத்த என்னை சில முட்டாள்கள் ஆற்றில் தூக்கி போட்டு விட்டனர்!


எல்லோரையும் ஜெயிக்க இருந்தேன்! ஆம்! எல்லோரையும்.
என்னங்க? என்ன உளறுகிறீர்கள்?


நான் களைப்பா இருப்பதால், தூங்குகிறேன்!


லண்டன் துப்பறியும் போலீஸ் ஸ்காட்லண்ட் யார்டில்...
இன்ஸ்பெக்டர் மார்க்! உங்களை சந்திப்பதில் மகிழ்ச்சி!


மோசஸ் சார்! அந்த பாம்பு பேராசிரியரை தீர்த்து கட்டியதற்காக நம்ம ரெண்டு பேருக்கும் விருது வழங்க பிரதமர் சிபாரிசு செய்துள்ளார்!

பாம்பு பேராசிரியர் என்றும், பயங்கர விஞ்ஞானி என்றும் அழைக்கப்பட்ட உயிர் இயல் நிபுணர் போப் படத்தின் முன் இருவரும் வந்து—

கடைசியா இந்த ஆளை ஒரு ஆற்றில் ஆழ்த்திவிட்டோம்!

ஆற்றில் நல்லா தேடிட்டாங்க. உடல் அகப்படல. பிணம் சகதியில் சிக்கி இருக்கும்!

போலீசார் இறந்துவிட்டதாக கருதிய அந்த பயங்கர பாம்பு பேராசிரியர் போப்தான், திம்ஸ் வீட்டில் இருந்தது!

என்னைக் காப்பாற்றிய நிக், டான், திம்ஸ் மூவரும்தான் வெள்ளைக் கண் வாலசை அழிக்க நினைச்சவங்க. இவங்களை விடக்கூடாது!

வெளியே போய்விட்டு திம்ஸ் வீடு திரும்பியதும், அவருக்கு அதிர்ச்சி காத்திருந்தது!

என்ன இது?

முட்டாளே! சத்தம் போடாதே! நான் பேராசிரியர் போப்! நான் கேட்பதற்கு பதில் சொல்!

நீயும், அந்த 2 மாணவர்களும் சேர்ந்துதான் வெள்ளைக் கண் வாலசை முறியடித்தீர்கள். பத்திரிகைகளில் படித்தேன். வாலசை இப்போ எங்கே?

ஆ! ஐயோ.


வாலசுடன் சேர்ந்து இந்த நாட்டை ஆளப் போகிறேன்! எங்கே அவர்?
அவர் இறந்து விட்டார்!


அப்போது கதவு திறந்து கொள்ள—
நானாவது சாவதாவது?
ஆ! என்ன! வாலஸ்! நீ சாகலியா?
!


வாலஸ் தீப்பெட்டி போன்ற ஒரு கருவியை எடுக்க, ஒருவித வாயு கதிர் பாய்ந்தது.
ஆ! ஐயோ!
ட்டக்!


அந்த கதிர் வீச்சின் பாதிப்பில் இருந்து திம்ஸ் மெதுவாக விடுபட்டார். ஆனால் அவர் கண்கள் வெள்ளையாகிவிட்டன
முட்டாளே நான் இறந்துவிட்டதாகவா நினைத்தாய்! உம், தப்பித்துக் கொண்டேன்! என்னைக் கொல்ல முயன்ற நீதான் சாகணும்! இதோ...!


வேண்டாம்! நிறுத்து!
யார் நீ? உன்னையும் கொல்வேன்!


நிறுத்து. என்னைக் கொல்ல நினைத்தால் உன்னை பாம்பாக மாற்றுவேன்.
நீர் பேராசிரியர் போப்பா?


மிஸ்டர் போப்! நான் உங்களை சந்திக்க நினைத்தேன். நாம ரெண்டு பேரும் சேர்ந்தால் உலகை ஆளலாம்!


நான் ஒரு விசேட வாயு கண்டுபிடிச்சிருக்கேன். அதை பாய்ச்சினால் உயிர் பிராணிகளை பல ஆயிரம் மடங்கு பெரிதாக்கலாம்!
உயிர் பிராணிகளை வேலை வாங்கும் அபூர்வ சக்தி எனக்கு இருக்கு. ரெண்டு பேரும் இணைவோம்!


மறுநாள் இரவு. பல்லி, தவளை, ஓணான் போன்றவற்றை விற்கும் ஒரு கடையை இருவரும் கொள்ளை அடித்தனர்.
வேண்டிய அளவு பல்லி எடுத்தாச்சு!
சீக்கிரம்!


பிறகு இருவரும் சோதனை சாலை வந்தனர்.
வாலஸ் இந்த பல்லியை ராட்சத பல்லி ஆக்குவோம்!
உம்! சக்திவாய்ந்த என் வாயு கதிரை அதில் பாய்ச்சுகிறேன்!


இரண்டு நாசகார மேதைகளும் சேர்ந்து சாதாரண பல்லியை பிரமாண்ட பல்லி ஆக்கினர்.
க்ர்ர்ர்ர்ர்ர்..!
ஆ! எவ்வளவு பெரிசு! எவ்வளவு பலம்!
அந்த பல்லி மேஜையை உடைத்தது
அது எனக்கு எப்படி பணிகிறது என்று பார்ப்போம்.


உயிர் இனங்களுக்கு கட்டளை பிறப்பிக்கும் அபூர்வ சக்தி போப்பிடம் இருந்தது.
பின்னால் போ! உம்! படுத்துக்கொள்!


போப் கட்டளைப்படி அது படுத்துக்கொண்டது.
போப்! யாரையாவது கொல்லும்படி சொன்னால், அது செய்யுமா?
எது சொன்னாலும் செய்யும்! உங்களை கொல்லச் சொல்லவா?


என்னையே மிரட்டுகிறீரா? சுய அறிவு இல்லாத வெள்ளைக் கண் ஆசாமியா உம்மை மாற்றுவேன்!
வேண்டாம்! வாலஸ்! ஒரு பேச்சுக்குச் சொன்னேன். நாம் இருவரும் உலகை ஆளவேண்டும்!


இதை வைத்து யாரையாவது கொல்லட்டுமா?


எனக்கும் உமக்கும் பொது எதிரி திம்ஸ்தான். அவனைக் கொல்வோம்!


சரி. அதுவரை இது அதன் சொந்த உருவத்தை அடையட்டும்.
ஆமா! இதை எடுத்து வைத்துக் கொள்கிறேன். விரைவில் திம்சை கொல்வோம்.


மிஸ்டர் திம்சை பார்க்க நிக், டான் இருவரும் வந்தனர்.


படுத்திருந்த அவரை அவர்கள் திருப்பி பார்த்தபோது, அவர் கண்கள் வெள்ளையாக இருந்தன.
டேய்! கண்கள் வெள்ளையா இருக்கு!
நம்ப முடிய வில்லையே!


வெள்ளைக் கண் என்றால் கொடியவன் வாலஸ் உயிரோடு இருக்கான் என்றுதானே அர்த்தம்!
உடனடியா இதுபற்றி போலீஸ் அதிகாரிகளிடம் சொல்லணும்!


திம்சின் கண்கள் வெள்ளை ஆக்கப்பட்டுவிட்டதால், அவர் வாலசின் கட்டுப்பாட்டில், ஒருவித மயக்கத்தில் இருந்தார்.
வாலஸ் நம்மைப் பார்த்தால் கொல்ல முனைவான்! எச்சரிக்கையா இருக்கணும்!


ஏய், டான்! அங்கே பார்! வாலஸ்! நாம் ஆற்றில் கண்டெடுத்த ஆளுடன் வருகிறான்!
அவங்க கண்ணில் படாம பின்புறமா போவோம்!


திம்ஸ் வீட்டுக்குள் வாலசும், போப்பும் நுழைந்தனர்.
திம்ஸ் எப்படி தப்பித்தான்? நடக்க சக்தி இராதே! வேறு யாரோ வந்து இருக்காங்க!


அந்தா பாருங்க!
எனது திட்டத்தை கடந்த காலத்தில் முறியடிக்க திம்சுக்கு உதவிய மாணவர்கள்! உம்! மூவரையும் கொல்வோம்! அந்த பல்லியை எடுங்க!


தீமை, அழிவு இவற்றின் மொத்த பிரதிநிதிகளான போப், வாலஸ் இருவரும் திம்ஸ் வீட்டைவிட்டு வெளியே வந்தனர்.
இதோ பல்லி தயார்!
அதற்கு முன் திம்சுக்கு சுயநினைவு வரச் செய்கிறேன். இந்தக் கருவி மூலம் அதைச் செய்யலாம். அவன் சாகும்முன் அவன் சுய உணர்வுடன் இருக்கணும்!


வாயு கருவியை வாலஸ் இயக்க, திம்ஸ் சுய உணர்வு கொண்டார்.
என்ன? எனக்கு புதிய பலம் வருகிறது!
திம்ஸ்! இனி நீங்க வெள்ளைக் கண் பிண மனிதர் அல்ல!



எனக்கு இப்போ எல்லாம் நினைவுக்கு வருது!
சார் திம்ஸ்! வாலசும், போப்பும் கூட்டு சேர்ந்துட்டாங்க. அபாயம் காத்திருக்கு!




அருமை பல்லியே! 10 ஆயிரம் மடங்கு பெரிதாகு!
அதோ அவர்கள்!
நச்சு மேதைகள் இருவரும் ஏதோ நாச வேலைக்கு தயார் ஆகுறாங்க.




ஸ்க்க்ரீச்!
அங்கே திரும்பு! அந்த மூன்று எதிரிகளையும் அழி!




அந்த ராட்சத பல்லி கொலை வெறியுடன், கடும் பசியுடன் பாய்ந்து வந்தது!
கர்ர்ர்ர்ர்!
நம்ப முடியவில்லையே! வாலஸ் நம்மை கொல்லாமல் விடமாட்டானா?




பழங்காலத்தில் "டைநோசர்" என்ற ஒரு பயங்கர ராட்சத மிருகம் இருந்தது. அதைப் போல் அந்தப் பல்லி பயங்கர பலத்துடன் விரட்டியது!

ஏய்! அங்கே பயங்கர பாதாளம்! போகாதே!

கால் வழுக்கி இழுத்துச் செல்கிறது.

மூவரும் கீழே விழுந்தனர். பிறகு இறக்கத்தில் உருட்டப்பட்டனர்!

ஐயோ! நாம செத்தோம்!




அதுவும் பள்ளத்தில் விழுந்தது. அப்போது பல பாறைகள் உருண்டு விழுந்தன.
கர்ர்ர்ர்ர்ர்!


அந்த அதல சுதல பாதாளத்தில் விழுந்து, ராட்சத பல்லி இறந்தது.
தட..கட...கட


அதை மாணவர்கள் நிக்கும், டானும் பார்த்து நிம்மதி அடைந்தனர்.
அப்பா! பயங்கரம்!
இந்த தடுப்பு பாறை மட்டும் இல்லாவிட்டால், நாமும் அதோ கதிதான். திம்ஸ் மாமா காயம் அடைஞ்சுட்டார்! அவரைப் பார்ப்போம்!

பாம்பு பேராசிரியர் போப்பும், வெள்ளைக் கண் வாலகும் ராட்சத பல்லியை பின்தொடர்ந்து வந்து பார்த்தனர். தங்கள் பழைய எதிரிகளான நிக், டான், திம்ஸ் மூவரும் பயங்கர பள்ளத்தில் விழுந்து இறந்துவிட்டதாக நினைத்து ஆனந்தப்பட்டனர்!

நமது லட்சியத்துக்கு குறுக்கே நின்ற 3 பேரும் குளோஸ்!

ஆனா நமது பல்லியும் இறந்துவிட்டது. அதற்கு ஆழ்ந்த அனுதாபம்!

பல்லிகள், தவளைகள், பாம்புகள் இவற்றைக் கொண்டு நாம் ஒரு பட்டாளத்தையே அமைக்க வேண்டும். என்ன சொல்கிறீர் போப்?

ஓகே. அவற்றிற்கு ராட்சத உருவம் கொடுத்து உலகை அழிப்போம்!

கீழே உயிரோடு இருந்த நிக், டான் இருவரும்—

திம்ஸ் மாமா மயக்கமா இருக்கார்!

இவரை எப்படியாவது ஆஸ்பத்திரியில் சேர்க்கணும்!


எனக்கு உதவி செய்! நான் முதலில் மேலே போறேன்.
ஜாக்கிரதை டா!


டான் கஷ்டப்பட்டு மேலே ஏறினான்.
மேலே அந்த கொடூர விஞ்ஞானிகள் இருக்கக்கூடாதே!


டான், ஓடிச் சென்று திம்ஸ் வீட்டில் இருந்து சுத்தியல் கடற்பாறை, கயிறு ஆகியவற்றை எடுத்து வந்தான்.
ஏய் நிக்! கீழே போட்டிருக்கும் கயிற்றை அவர் உடம்போடு சேர்த்து கட்டு.


திம்ஸ் உடலில் கயிற்றைக் கட்டிவிட்டு நிக் மேலே வந்தான். பிறகு இருவரும் திம்சை தூக்கினர்.
மெள்ள, பார்த்து தூக்குடா!


திம்ஸ் மாமாவை தூக்கிப் போய் ஆஸ்பத்திரியில் சேர்ப்போம்!
பிறகு போலீஸ் நிலையம் போய் புகார் கொடுப்போம்!


மாணவர்கள் நிக், டான் இருவரும் போலீஸ் அதிகாரியிடம் நடந்ததை விவரித்தனர்.
பாம்பு பேராசிரியரா? வெள்ளைக் கண் வாலசா? என்ன ஜோக் இது! ஏப்ரல் 1 முடிஞ்சுபோச்சு தம்பிகளா!
சார்! நாங்க உண்மையைத்தான் சொல்றோம். தமாஷ் அல்ல எங்களை நம்புங்க!


நாம நினைக்கிற மாதிரி போப்போ, வாலசோ சாகவில்லை!
உம்...சரி வாங்க! இன்ஸ்பெக்டரை பார்ப்போம்!


இன்ஸ்பெக்டர் முன்...
ஆட்களை வெள்ளைக் கண் ஜடங்களாக மாற்றும் அந்த வாலஸ் இறந்து விட்டான் என்பதே போலீஸ் ரிக்கார்டு. அப்படி இருக்கும்போது...
சார்! நாங்க உண்மையைத்தான் சொல்றோம். நாங்க ரெண்டு பேரும் நல்லா பார்த்தோம்!


போலீஸ் நிலைய சுவரில் ஒட்டப்பட்டு இருந்த போப் படத்தை நிக் பார்த்து...
சார்! இந்த படத்துல இருக்கும் நபரும் வாலசோட இருக்காரு!
என்ன இது? நம்பவே முடியலியே!


பிறகு, இன்ஸ்பெக்டர் ஸ்காட்லண்ட் யார்டு துப்பறியும் போலீசுக்கு தகவல் கொடுத்தார்.
ரெண்டு மாணவர்களும் உறுதியா சொல்றத பார்த்தா நம்ப வேண்டி இருக்கு!


பிறகு மாணவர்கள் இருவரும் போலீஸ் காரில் லண்டனுக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். அங்கே விசாரணை நடந்தது.
தம்பிகளா! இவர் இன்ஸ்பெக்டர் மார்க்! போப் சம்பந்தப்பட்ட புகார்களை விசாரிப்பவர்!
சார்! நீங்க எவ்வளவு விவரம் கேட்டாலும் சொல்கிறோம்!


மாணவர்கள் கொடுத்த தகவல்கள் இன்ஸ்பெக்டர் மார்க்கை நம்பச் செய்தன.
இந்தப் பகுதியில்தான் போப்பும், வாலசும் கடைசியா காணப்பட்டார்கள் இல்லையா? அந்த இடத்தை சுற்றி வளையலாம்!
ராணுவத்தை வரவழைப்போம். நாம் இந்த மாணவர்களுடன் ஹெலிகாப்டரில் பறந்து பார்ப்போம்.


போப்பும், வாலசும் தங்கள் மறைவிடத்தில்....
வாலஸ்! இந்த புதிய நாற்காலி ஸ்கூட்டர் எப்படி இருக்கு?
பல மாத ஆராய்ச்சிக்கு பிறகு, இதை செய்தேன். சரளமாக போக, வர இதில் எல்லா வசதியும் இருக்கு.


இந்த விசேட நாற்காலி—ஸ்கூட்டர் படிகளில் ஏறும் இறங்கும்!
சரி! நாம் உலகை ஆளும் நமது லட்சியத்தை நிறைவேற்று வோம்!
தடக்! தடக்!


இந்த நாற்காலியில் ஒரு செயற்கை கையை இணைத்து இருக்கேன். அதைக் கொண்டு கதவைப் பூட்டுகிறேன்.

பிறகு இருவரும் தங்களிடம் இருந்த பல்லிகளை எடுத்து ஒரு பெட்டியில் அடைத்துக்கொண்டனர்.

நாம் அழிக்க வேண்டிய நகரத்துக்குப் போய், ராட்சத பல்லி பட்டாளத்தை ஏவி விடுவோம்!

அவர்கள் புறப்படும்போது ஒரு ஹெலிகாப்டர் வானத்தில் வட்டமிட்டது.

அந்த ஹெலிகாப்டரில் வருவது யார்?

யாரோ பறக்கலாம்! நம்மைத் தேடியா வரப்போறாங்க! நாம அப்பாவி கிழவன்கள்!


ஆனால்...
அதோ அவர்கள்தான்!
இந்தத் தடவை அவர்களை பிடிக்காமல் விடக்கூடாது!


ராணுவத்தினருக்கு செய்தி! எல்லா யூனிட்டுகளும் வரை படத்தில் குறிக்கப்பட்டுள்ள 6, 2, 3, 9 ஆகிய பகுதிகளை சுற்றி வளையுங்க!


ஹெலிகாப்டரில் இருப்பவர்களைப் பார்த்து விஷ விஞ்ஞானிகள் திடுக்கிட்டனர்.
விமானத்தில் என் பழைய விரோதிகளும், இன்ஸ்பெக்டர்கள் மார்க், மோசஸ் ஆகியோர் இருக்காங்க!


சீக்கிரமா
பல்லிகளே விடுங்க!
என் வாயு கதிர்களால்
அவற்றை ராட்சத
பல்லிகளாக
ஆக்குகிறேன்!
ஆமா! நமது
படைகளால் இவர்களுக்கு
பதில் சொல்வோம்! இதோ போர்
தொடங்கிவிட்டது!


போப்! உம்,
சீக்கிரம்! பல்லிகளே
எடுத்து விடுங்க!
போப், 3 பல்லிகளே
பெட்டியில் இருந்து
எடுத்து வெளியே
விட்டார்.


அவற்றின் மீது வாலஸ்
விசேட வாயு கதிரை
பாய்ச்சினர்!
உம்! பத்தாயிரம்
மடங்கு பெரிசாயும்,
பலமாயும்
வளருங்க!


கர்ர்ர்!
கிரிக்!


திடீர் என்று மூன்று ராட்சத மிருகங்களைப் பார்த்த இன்ஸ்பெக்டர் மார்க்கும் மற்றவர்களும் திடுக்கிட்டனர்.
ராணுவ யூனிட்டுகளே உஷார்!
எப்படி இவை திடீர் என்று வந்தன?
என்னையும் டானையும் விரட்டிய ராட்சத மிருகம் மாதிரி இருக்கின்றன!
போப்— வாலஸ் இருவரும் உருவாக்கிய மிருகங்கள்தான் இவை.
பல்லிப் பயங்கரங்களே! எங்கள் எதிரியை தாக்குங்க!


நீண்ட நாக்குடனும், வெள்ளைக் கண்களுடனும் பயங்கர சத்தத்துடனும் அவை பகைவர்களை வேட்டையாட புறப்பட்டன!
ர்ர்ர்!
ஸ்க்ரீச்!
எல்லா ராணுவ யூனிட்டுகளும் தாக்க தயார் ஆகுங்க!


அந்த விமானம், ராட்சத பல்லிகளுக்கு நேர் மேலே வந்து ராணுவத்தினருக்கு தகவல்களையும் உத்தரவுகளையும் பிறப்பித்துக்கொண்டு இருந்தது.
எல்லா யூனிட்டுகளும் முன்னேறி வாங்க!
பல்லிகள் நிமிருகின்றன! ஜாக்கிரதை!


ஹெலிகாப்டர் அருகே வந்தபோது ஒரு ராட்சத பல்லி தனது பிரமாண்ட நாக்கால் ஓங்கி அடித்தது!


அதனால் ஹெலிகாப்டர் நிலைகுலைந்து கீழே விழ இருந்தது!

போப்பும், வாலசும் அதைப் பார்த்து ஆனந்தம் அடைந்தனர்!

உம்! விடாதிங்க! துரத்துங்க!

போங்க! கொல்லுங்க!

உயரத்தில் பறந்த ஹெலிகாப்டரை ஒரு பல்லி தனது வாலை மேலே உயர்த்தி தாக்க வந்தது!

ஏய்! மேலே போ! ஆபத்து!

பூம்ம்!

பல்லியின் வால் ஹெலிகாப்டரை தாக்கி நொறுக்க இருந்த அதே நேரத்தில், ஒரு குண்டு வெடித்து அந்த பல்லியைக் கொன்றது!


உம்! தொடர்ந்து குண்டுகளை வீசுங்க! சுற்றி வளையுங்க!
போப், வாலஸ் ரெண்டு பேரையும் துரத்தி பிடிங்க!


போப்—வாலஸ் இருவரும் அபாயத்தை உணர்ந்தனர்.
உம்! பல்லி பயங்கரங்களே! ராணுவத்திடம் இருந்து எங்களை காப்பாத்துங்க!
போப்! நாம தப்பிக்கணும்! நம்மை ராணுவம் சூழ்ந்திருக்கு! ரெண்டு பல்லிகளையும் விட்டு ராணுவ வளையத்தை உடைக்கணும்!


உடனே பல்லி பயங்கரங்கள் ராணுவ வீரர்களை நோக்கி பாய்ந்தன. அவற்றோடு வாலஸ், போப் இருவரும் நாற்காலி ஸ்கூட்டரில் சென்றனர்.
எங்களுக்கு வழி ஏற்படுத்துங்க! நாங்க தப்பணும்!


உம், சுடுங்க! சுட்டுக்கிட்டே இருங்க!


ராணுவத்தினர் சரமாரியாக சுட்டனர்.
டட்..டட்..டட்..
கர்ர்ர்ர்ர்ர்
ஸ்க்ரீச்!


இதனல் துப்பாக்கி குண்டுகளால் அந்த ராட்சத மிருகங்களை ஒன்றும் செய்ய முடியவில்லை. வீரர்களை அவை விரட்டின.
ராணுவ வீரர்களுக்கு ஆபத்து!
டாங்கிகளும், கவச மோட்டார்களும் வரட்டும்! குவிக்!


ராணுவ வீரர்களை மிதித்து துவைத்துக்கொண்டு பல்லிப் பயங்கரங்கள் முன்னேறின.
ஓடுங்க! ஓடுங்க!
ஸ்க்ரஞ்ச்!
த்ராங்க்!
ஆர்க்!


உம்! வேகம்!
சந்தடி சாக்கில் இருவரும் தப்பினர்!


ஒரு ராணுவ வீரன் தடுக்க முனைந்தான். ஆனால்...
நாயே! எங்களை யார் என்று நினைத்தாய்?
ட்டாங்க்!


இன்ஸ்பெக்டர்
மோசஸ் பேசறேன்!
தப்பித்துவிட்டார்கள்!
டிர்ட்ரோடு பக்கமா
போறுங்க!


அவங்க
தெரியும்படியா
பறங்க!
டான்
பயப்படாதே!
எப்படியாவது
பிடித்துவிடலாம்!
கவச
மோட்டாருக்கு
செய்தி!


இன்ஸ்பெக்டர்
மோசஸ்! ராணுவ
யூனிட் 3 பேசுகிறோம்!
2 கவச மோட்டார்
தயாரா இருக்கு.
அந்த ரோட்டுக்கு
போகிறோம்!


வாலஸ்!
அங்கே
பாருங்க!
மற்ற பல்லிகளை
ராட்சத மிருகங்களாக
உருவாக்க நேரமில்லை!
வேறு மார்க்கம்
இருக்கு!


கவச மோட்டார் அருகே வந்ததும் நாற்காலி-ஸ்கூட்டர் நின்றது!
ஏய், உங்களைத்தான்! அப்படியே நில்லுங்க! ஒரு அடி அசைந்தாலும், சுட்டுக் கொல்வோம்! எச்சரிக்கை!


போப்! இந்த பசங்க நம்ம பிடிக்கப் போறுங்களாம்! நல்ல ஜோக்! என் வாயுவின் சிறப்பு இவங்களுக்குத் தெரியாது!
இவர்களை ராட்சதர்களாக வளர்க்கப் போறீங்களா?


இல்லே. குள்ளர்களா மாற்றப் போறேன்! ஹி...ஹி...ஹி...
புஸ்ஸ்...


என்ன? நமக்கு என்ன ஏற்படுது?
நாம் சுருங்குகிறோம்.
ஆம்; அவர்கள் குள்ளர்கள் ஆனார்கள்!


போப்! பாத்திங்களா? கொஞ்சம் கொஞ்சமா உயரம் குறையிராங்க! பாவம்!


திடீர் என்று நாம் குள்ளர் ஆயிட்டோம்!
என்ன இது?


ஹி! ஹி!
போப் பாருங்க!
ஒருவன் துப்பாக்கியால் சுடுறான்! குண்டு நமது விசேட வாயுவில் அழிகிறது!
புஸ்ஸ்...


பிறகு ராணுவ வீரர்கள் கண்ணுக்கு தெரியவில்லை!
வாலஸ்! உங்க விசித்திர வாயு ஒரு அற்புத வாயு! அபூர்வ வாயு! ஆகா!
ராணுவ வீரர்களை கண்ணுக்கு தெரியாமல் மறையும்படி செய்துவிட்டேன்! நான் எவ்வளவு பெரிய விஞ்ஞானி! இந்த உலகத்தையே ஆளும் ஆசை எனக்கு இருப்பது தவறு?


இந்த அற்புதமான வாயுவை வைத்து எல்லோரையும் அழிப்பேன்!
வாலஸ்! மக்களே இல்லாமல் அழித்துவிட்டு உலகை ஆண்டு என்ன பயன்? அதனால் பழைய திட்டப்படி, அதிரடி தாக்குதல் நடத்தி, பீதியை ஏற்படுத்தி ஆட்சியை பிடிப்போம்!


சரி! நமக்குள் சண்டை வேண்டாம்! இப்போ தப்பிப்போம்!


இதற்கிடையில் நடந்தது தெரியாமல் நிக்கும் டானும் பறந்துகொண்டு இருந்தனர்.
அதோ கவச மோட்டார்கள்!
போப்பையும், வாலசையும் ராணுவ வீரர்கள் பிடித்துக் கொண்டு போய்விட்டார்களா?


விவரம் தெரிந்துகொள்ள தலைமை நிலையத்துடன் தொடர்பு கொண்டனர்.
மார்க்! தலைமை நிலையத்தில் சொல்லுங்க தொடர்பு அறுந்து விட்டதாக
நாம் கீழே இறங்கி பார்ப்போம்!


அப்படியே விட்டுவிட்டு எங்கே போனாங்க?
ஏதோ மர்மம் நடந்திருக்கு. துப்பு துலக்குவோம் வா!


அந்த இடத்தை ஆராய்ந்தபோது, நிக் ஒரு சிறிய துப்பாக்கியை கண்டு எடுத்தான். வாலசின் வாயுக்கு தப்பி மறையாமல் இருந்தது அது!
இதோ பாருங்க! துப்பாக்கி சுருங்கி இருக்கு!


அதை வைத்து அனுமானித்தனர்.
வாலஸ், உருவங்களை பெரிதாக்கும் வாயு வைத்திருக்கான்!
அதோடு, அந்த வாயுவால் ஆட்களையோ பொருட்களையோ சிறிதாக்கவும் முடியும்.
ராணுவத்தினரை சிறிதாக்கி, மறைத்துவிட்டனர்!


பிறகு அவர்கள் ஹெலிகாப்டரில் ஏறினர்.
இதை ரகசியமா வைக்கணும். பொது மக்களுக்குத் தெரிந்தால் பயங்கர பீதி பரவும். அந்த அரக்கர்கள் அடுத்து என்ன செய்றாங்க என்று பார்ப்போம்!


10 மைல் தூரத்தில் உள்ள தன்புரி நகரில் மாமூல் வாழ்க்கை நடந்துகொண்டிருந்தது!
போஸ்ட்மேன்! குட்மார்னிங்!
நகரமே அமைதியா இருக்கே! புயல் ஏதாவது வீசப் போகுதா?


மத்திய நூலகத்தில் அமைதியாக வேலை நடந்தது.
சத்தம் போடாதீர்.
பயண நூல்கள்.


ஆனால் கொஞ்ச நேரத்தில்...
டமால்!
ஆ..!
டம்ம்..!
என்ன நடக்கு?
ஐயோ! கட்டிடம் இடியுதே!


பெரிய பெரிய கட்டிடங்கள் தரை மட்டம் ஆக, மிகப்பெரிய ராட்சத தவளை ஒன்று தென்பட்டது.
கர்க்!
கர்ர்ரக்!
ஆம்! போப்—வாலஸ் மீண்டும் படை எடுத்தனர்!


நூல் நிலைய கட்டிடம் முழுவதும் நொறுங்கியது. காலம் காலமாக பாதுகாத்து வைக்கப்பட்ட பல அரிய நூல்கள் அழிந்தன.
இதென்ன இதுவரை இல்லாத பயங்கரம்!


டமால்!
கர்ர்ரக்க்!


இந்த உலகம் அழிய போகுதா?
வானவெளியில் உள்ள ஒரு கிரகத்தின் தாக்குதலா!







போப்! கொஞ்சம் கற்பனே செய்து பாருங்க! இந்த பொதுமக்கள் படும்பாட்டை! ஹி! ஹி!

அவர்கள் நம்மை தாக்க நினேத்தால் நம் தாக்குதல் அதிகமாகும்! முதலில் இங்கிலாந்தை அழிப்போம்! பிறகு ஒவ்வொரு நாடாக பிடிப்போம்!


அப்போது போலீஸ் நிலையத்தில்—
சப்-இன்ஸ்பெக்டர் வால்டர்ஸ் பேசறேன். தன்புரி நகரமே அழிந்துகொண்டு இருக்கு! ராணுவம் தேவை! வைத்திய உதவி தேவை!


க்ரக்...கரக்...!
கர்ர்ர்...


வால்டர்ஸ் செய்தி கிடைத்ததும் இன்ஸ்பெக்டர்கள் மோசசும், மார்க்கும் காரில் பறந்தனர்.
தன்புரிக்கு போவோம்!
இந்த மாணவர்களை என்ன செய்ய?


நீங்க மாணவர்கள்! உங்க ரெண்டு பேரையும் இந்த பிரச்சினையில் ஈடுபடுத்த நாங்க விரும்பவில்லே. எனவே கீழே இறங்கிக் கொள்ளுங்க! அவசரம்!
நாங்க ஏற்கனவே இந்த பிரச்சினையில்...
...ஈடுபட்டு உள்ளோம்.


உங்க உதவிக்கு நன்றி. ஆபத்தான இந்த போராட்டத்தில் நீங்க ஈடுபட வேண்டாம்!


உம்...அவர்கள் போகட்டும்!
டேய்... தன்புரி போக எனக்கு குறுக்கு வழி தெரியும் வா. திமையை எதிர்க்க நம்மால் முடிந்ததைச் செய்வோம்!


குறுக்கு வழியாக குன்றில் ஏறி போனபோது—
நிக் அதோ பார்!
அது வாலசும், போப்பும் அல்லவா?


இந்த அழிவு விஞ்ஞானிகளை அழிக்கணும். வா! உடனே போலீசாரிடம் போய் இவர்கள் இங்கிருப்பதை சொல்வோம்!
எவ்வளவு பெரிய மேதைகளாக இருந்தாலும் இவர்கள் நமக்கு தேவை இல்லே! வா!

ஆனால் மாணவர்களை, இருவரும் பார்த்துவிட்டனர்.

போப்! அந்த மாணவர்கள்!

நம்மை பிடிக்க ஏதோ திட்டத்தோடு வந்திருப்பாங்க!

அவர்கள் கண்ணில் படாமல் ஓடிவிடுவோம்! நமது படைகள்தான் நகரத்தை அழித்து விட்டதே!

இந்தக் கதை இத்துடன் முடிந்து விட்டாலும், தீமைக்கும் நன்மைக்கும் இடையே தீராத போராட்டம் நடந்து கொண்டே இருந்தது. தீமையின் பிரதிநிதிகளாய் வெள்ளைக் கண் வாலஸ், பாம்பு பேராசிரியர் போப் இருவரும் ஒரு அணியாகவும்; நன்மையின் பிரதிபலிப்பாய் நிக், டான் ஆகிய மாணவ மணிகள் இன்னொரு அணியாகவும் நின்று போர் புரிந்தனர். இந்தக் கதை இப்போது முடிந்தாலும், அந்தப் போர் தொடர்ந்து கொண்டுதான் இருந்தது!

முற்றும்.

ராணி சிண்டிகேட் சார்பில் வெளியிட்டவர், ஆசிரியர்: எஸ்.ராமஜெயம், 1091,பெரியார் நெடுஞ்சாலை, சென்னை—600 007. அச்சிட்டவர்: சி.கல்யாணசுந்தரம், ராணி அச்சகம்,1091,பெரியார் நெடுஞ்சாலை, சென்னை—600 007.



இன்ஸ்பெக்டர்
ஆசாத்
துப்பறியும்,

# கொலைகாரச் சாமியார்

மத்திய சிறையின் இரும்புக் கதவுகள் திறந்தன.




சிறைப் பறவை சேது, 5 ஆண்டு கடுங்காவல் ஜெயில் தண்டனையை முடித்திருந்தான்!






சேது! உன் எதிர்காலம் பற்றி என்ன முடிவு செய்திருக்காய்?

நல்ல திட்டம் வைத்திருக்கேன்.

சீக்கிரம் என்னை நீங்க வித்தியாசமான ஆளா பார்ப்பீங்க!

ஆமாம்! நான் காவி உடுத்தி, காஷாயம் பூணப் போகிறேன்! சன்னியாச சத் வாழ்க்கை என்னை அழைக்கிறது!

நான் ஆச்சரியப்படவில்லை சேது! பெரிய பாவம் செய்தவன் பெரிய சாது ஆவான் என்று காந்தி அடிகளே கூறி இருக்கார்.

சேது! உன் வாழ்க்கை சிறப்பா அமைய என் வாழ்த்துக்கள்!

எப்போதாவது என் உதவி தேவைப்பட்டால் கேள். செய்ய காத்திருக்கிறேன்!

நன்றி! இன்ஸ்பெக்டர்!


.அவன் போனதும்—
தினகர்! சிறைப் பறவை சேதுவை பின்தொடர். அவன் என்ன செய்கிறுன் என்பதை கண்டறிந்து ஒரு மாதத்துக்குள் சொல்!
தினகர், ஒரு துப்பறியும் போலீஸ்!


சேது, தன் வீட்டில் இருந்தான். அப்போது அவன் கூட்டாளி அமீர் வந்து சந்தித்தான்.
சேது! ஜெயில் வாழ்க்கை எப்படி இருந்தது?


ஏன் அப்படி?
அதை ஏன் நினைவு படுத்துகிருய்? என் முட்டிகள் இன்னும் வலி எடுக்கின்றன.


நமது கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் அனைவர் பெயரையும் கேட்டு என்னை பாடாய் படுத்திவிட்டனர்!


"எனக்கு தெரியவே தெரியாது!" என்று சாதித்து விட்டேன்!


அவர்கள் பேசுவதை சி. ஐ. டி. தினகர் கேட்டுக்கொண்டிருந்தார்!
சரி! இனி என்ன செய்யப் போகிறாய்? அடுத்த திட்டம் என்ன?


ஒரு அருமையான திட்டத்தை தயாரித்து வைத்து இருக்கேன்!


இனி கொள்ளை அடிக்க வேண்டாம்!


புனிதமான பக்தி மார்க்கத்தை மேற்கொள்ள வேண்டும்!


அது பணம் சம்பாதிக்க, எளிதான வழி மட்டும் அல்ல. பாதுகாப்பான வழியும் கூட!



அமீர், என் திட்டம் பற்றி உன் கருத்து என்ன?

உன் திட்டம் எப்போதும் லாபகரமா இருக்கும்!

அவர்கள் பேசுவதை சி. ஐ. டி. உன்னிப்பாக கேட்டார்!

கொஞ்ச நாட்களில் சேது, தனது கூட்டாளி அமீர் உதவியோடு ஒரு கொள்ளைக் கூட்டத்தை ரகசியமாக சேர்த்தான்! பிறகு சேது மகராஜ் என்று பெயரை மாற்றினான்!





















சில நிமிடங்களில், தாராசிங் என்ற அந்த வாலிபன் உயிர் இழந்தான்!





சேது ஒரு வெற்றிச் சிரிப்பு சிரித்தான்.
நம் கூட்டாளி ஒருவனை கொலை செய்துவிட்டதா ஆத்திரப் படாதிங்க! அவன் யார் என்று சொல்றேன்!




இந்த ஒட்டு மீசையை எடுத்துவிட்டால், இவன் சுயரூபம் தெரிந்துவிடும். இவன் போலீஸ் சி. ஐ. டி. தினகர். நான் விடுதலை ஆலயத்தில் இருந்து இவன் என்னைக் கண்காணிக்கிறுன்!




மாவட்ட போலீஸ் தலைமை அலுவலகத்தில்—
சார்! இந்த அறிக்கைப்படி 50 பேர் வரை கடந்த 2 மாதத்தில் திடீர், திடீர் என்று காணுமல் போய் இருக்காங்க!




நமது
சி. ஐ. டி. தினகரும்




சரி! அதற்காக நாம் சும்மா இருக்க முடியாது!


இந்த மர்மத்தில் பழைய கொள்ளையன் சிறைப் பறவை சேது சம்பந்தப்பட்டு இருக்கலாமோ!


சேதுவை பின்தொடர்ந்த தினகரை காணவில்லை என்பதில் இருந்து நீ அவனை சந்தேகப் படுகிறாய்!


ஆனால் அவன் சந்நியாசி ஆகிவிட்டதை என் கண்ணால் பார்த்தேனே!
உண்மையா சார்?


அதோ பார்!


ஆசாத்தால் தன் கண்களையே நம்ப முடியவில்லை.
அது சேது மகராஜ்! தன் அடியார்களுடன் போகிறார்!


இதனால்தான் நான் சேதுவை சந்தேகிக்கவில்லை.
அப்போது நாக்ரா நகர வீதிகளில் சேது பஜனை பாடிக்கொண்டு சென்றான்.


ஆனாலும் சேது மீது என் மனம் சந்தேகம் கொள்கிறது!


ஆசாத், தன் காதலி மீராவுடன்—
என்ன கவலை, ஆசாத்?
இதுவரை ஐம்பதுக்கும் அதிகமான ஆட்கள் காணாமல் போய் இருக்காங்க!


கடந்த வாரம் ஒரே குடும்பத்தைச் சேர்ந்த 7 பேரைக் காணவில்லை.


எப்படி காணாமல் போறாங்க?


அதைத்தான் கண்டுபிடிக்கணும்!


யார் மீதாவது சந்தேகம் இருக்கா?
ஆமா. ஆனா அவர் ஒரு சாது!


நீங்க சேது மகராஜையா சொல்றீங்க?
எனக்கு அவனை பழைய கைதி சேதுவாகத்தான் தெரியும்!


ஆசாத்! எனக்கு ஒரு யோசனை தோணுது!


மீரா பையைத் திறந்து ஒரு புத்தகத்தை எடுத்தாள்.
இந்த புத்தகத்தைப் படியுங்க. உங்க சந்தேகம் தீரும்!
என்ன புத்தகம் இது?


இது "தக்கர்கள்" என்ற கொள்ளைக் கூட்டத்தை பற்றிய நூல். அவங்கதான் ஆட்களை காணாமல் போகச் செய்யும் கலை தெரிஞ்சவங்க!


அந்த சேது;
தக்கர்களின் வழி
வந்தவனு இருப்பான்.
தன் மூதாதையர்
வழியை இவன்
கடை
பிடிக்கலாம்!
மீரா! நீ சொல்றது சரியா
இருக்கலாம். எப்படியாவது
அவனைக் கையும் களவுமா
பிடிக்கணும்!


சேது மகராஜ், தனது காவி உடை அடியார்களுடன் ஒரு கிராமத்துக்குள் நுழைந்தார்!
இவர்
சக்திவாய்ந்த
சந்நியாசி!
பெரிய மகானுகை
இருந்தும் சாதாரண
மனிதனைப் போல் வாழ்கிருர்.


கலியா கிராமத்தில் கோவில்
கட்ட ரூ. 5000 கொடுத்து
உள்ளார்.
கிராமவாசிகள் சேதுவின்
கூட்டத்தாரை பாராட்டினர்.


அவரை இங்கே கொஞ்ச
நாள் தங்கச்
சொல்வோம்!


கிராமத்தின் அருகே ஒரு இடத்தை தேர்ந்து எடுத்து சேது மகராஜ் முகாம் அடித்தார்.
அமீர்! ஏதாவது செய்தி உண்டா?
அமீர்தான் சேதுவின் வலது கரம்.


இன்று இரவு, பண்ணையார் குடும்பம் தரிசிக்க வரலாம்!
உண்மையாகவா?


அவதார புருஷர் போல் உங்களால் அற்புதங்களை செய்ய முடியும் என்று அவர்களை நம்பச் செய்தேன்!


ஆமாம்! நாம் அற்புதங்களை நிகழ்த்த கூடியவர்களே!


சேது மகராஜின் ஆசீர்வாதத்துக்கு கூடி இருந்த கிராமவாசிகள் கூட்டம் ஊர் திரும்பிய நேரம்—
எனக்கு குழந்தை வரம் கொடுத்தார்!

கூடாரத்துக்கு பின்புறம் உள்ள கணவாயில், சேதுவின் ஆட்கள் —



பலரை புதைக்கக்கூடிய பெரிய குழியை தோண்டிக்கொண்டு இருந்தனர்.

பண்ணையார் குடும்பத்துடன் வந்திருந்தார்.




சேது மகராஜ் கூட்டத்தினர் பஜனை பாடினர்.







சேது மகராஜின் பிரதாபங்களை பிரதம சீடன் அமீர் சொன்னான்.




உடனே பூமியில் இருந்து ஒரு தங்கச் சிலை வெளிவரும்!


பஜனையும், பக்க வாத்திய தாளமும் உச்ச ஸ்தானியை எட்டின!
அரே ராமா! அரே ராமா! அரே...அரே...


அந்த நேரத்தில் சில முரட்டு சீடர்கள், பண்ணையார் குடும்பத்தினர் பின்னே அமைதியா வந்து நின்றனர்.
அந்த தடியா இருக்கும் ஆளை நான் கவனிக்கிறேன்!


அந்த சீடர்கள் பண்ணையார் குடும்பத்தினர் கழுத்தில் துணியை போட்டு அமுக்கும்போது, மற்ற அடியாட்கள் அவர்கள் திமிறமல் பிடித்துக்கொள்ள திட்டம்.


நேரம் நெருங்கிவிட்டது. ஒரு சீடன் சேது மகராஜ் முன்னால் சுக்காவை வைத்தான். எல்லோரும் தயார் ஆவதற்கு, அதுதான் அறிகுறி.


சாவு வர இருப்பதை அறியாத பண்ணையார், பக்தி பஜனையில் மூழ்கி இருந்தார்.


திடீர் என்று சேது மகராஜ் உரத்த குரலில் கூறினார்.
கொஞ்சம் புகையிலை கொண்டு வா!


புகையிலை என்ற வார்த்தைதான் அன்றைய "கொலைச் சொல்" உடனே நாணயம் முடியப்பட்ட துணிகள் பண்ணையார் குடும்பத்தினர் கழுத்துகளை இறுக்கின.
ஆ! ஆ


ஆ!



கழுத்து நெரிபடுபவர்கள் சத்தம் வெளியே கேட்காமல் பஜனை மேலும் உச்ச ஸ்தானியை எட்டியது.




கொஞ்ச நேரத்தில் பண்ணையார் குடும்பத்தினர் பிணமாக சாய்ந்தனர்.
சீக்கிரம்!




நகைகளை எல்லாம் கழற்றுங்க!




நகைகள் வேகம் வேகமா கழற்றப்பட்டன.
சேது! இந்த மோதிரம் மட்டும் ரூ. 7,000 பெறும்!
பிணங்களை சீக்கிரம் புதையுங்க!




தயாராக இருந்த படுகுழியில் பிணங்கள் போடப்பட்டன!
உம்! சீக்கிரம் மூடுங்க! முகாமை காலிபண்ணனும்!




மறுநாள் எஸ். பி. ஆபீசில்—
என்ன! பண்ணையார் குடும்பத்தோடு காணவில்லையா?


பண்ணையாரின் வேலையாள் ராமுவிடம் ஆசாத் விசாரித்தார்.
பண்ணையார் தன் குடும்பத்துடன் ஒரு மகானை தரிசிக்க நேற்று மாலை போனார்!


இதுவரை திரும்பலே. சந்தேகப்பட்டு போலீசுக்கு சொன்னேன்!


இங்கே சேது மகராஜ் முகாமிட்ட இடம் தெரியுமா?
தெரியும் சார்!


பிறகு—
அதோ அந்த ஆலமரத்துக்கு அடியில் சார்!


வாகனங்கள் நிறுத்தப்பட்டன.


காணாமல் போனவர்கள் இங்கேதான் எங்காவது புதைக்கப்பட்டு இருக்கணும். தடயங்களைத் தேடுங்க!


துப்பறியும் வேலை மும்முரமாக, நடந்தது.
ஆசாத்! இந்த இடத்தை தோண்டிப் பார்ப்போம்!


இந்த இடத்துல மண் புதுசா இருக்கு. தெரியாம இருக்க, இதுமேல சமையல் செஞ்சிருக்காங்க!


உடனே, தோண்டும் வேலை தொடங்கியது!


பிணங்கள் இங்கே கிடைத்தாலும், கொலையை நிரூபிப்பது எப்படி?


தோண்டி முடிந்ததும் கோரக் காட்சி—
பிணங்களின் தலைகளை கொள்ளையர் துண்டித்து இருக்காங்களே!


எஸ். பி. ஆபீஸ்.
ஆசாத்! சேது மகராஜ்தான் கொலே செய்தார் என்பதற்கு ஆதாரங்களைக் கண்டுபிடி!
அப்படியானல் நான் சேதுவைப் பின்தொடர்கிறேன்!
உன்னுடன் "தற்கொலே" படைப் பிரிவை அழைத்துச் செல்!


சம்பல் நதிப் பள்ளத்தாக்கில் ஒரு செழிப்பான கிராமம். அருகே சேது மகராஜ் முகாம் அடித்து இருந்தார்.


அமீர்! இந்தக் கிராமத்தில் பணக்கார விவசாயி யார் என்று பார்த்து இங்கே கூட்டி வா!
சரி, சேது!

கிராமத்தை நோக்கி, அமீர் போனான். வழியில்— ஆந்தை எதிர்படுகிறது. சகுனம் சரி இல்லை, திரும்பி விடலாம் என்று அமீர் நினைக்கையில், ஒரு பணக்கார விவசாயி அங்கே வந்தார்.
















இன்றிரவு காட்டில்தான் தங்கி இருப்போம்! மாலையில் வாங்க! ஆசிர்வதிப்பார்!
தவறாமல் வருவோம். சுவாமியிடம் சொல்லுங்க!


தவறாமல் சொல்றேன்!


பணக்கார விவசாயிகள் போல் வேஷம் பூண்டிருந்த ரகசிய போலீசின் தற்கொலைப் படையினர் ஆசாத்தை சந்தித்தனர்.
எல்லா ஏற்பாடும் தயார்!
ஒரு டஜன் அதிகாரிகளை முகாமைச் சுற்றி நிறுத்துகிறேன்.


உடனடியாக தற்கொலை படையினர் சாமியார் சேது தங்கி இருந்த முகாமுக்கு கிளம்பினர்.



அன்று மாலை, தற்கொலை படையினர் பணக்கார குடியானவர்கள் வேடத்தில் சேது மகராஜ் முன் அமர்ந்தனர்.
ஆகா! என்ன அருமையான பஜனை!




மகான், என்னை எப்போது ஆசீர்வதிப்பார்?
உங்க மனைவியைத்தான் ஆசீர்வதிப்பார்.
சேதுவின் கூட்டாளி அமீர், "குடியானவர்" களிடம் பேசிக்கொண்டிருந்தான்.




உங்க மனைவியை அழைத்து வரவில்லையா?




நீங்க முன்கூட்டியே சொல்லவில்லையே! நான் போய் அவளை அழைத்து வரவா?
பரவாயில்லை. பார்த்துக் கொள்ளலாம்!




பஜனை பாடலும், தாள வாத்திய சத்தமும் உச்ச கட்டத்தை அடைந்தன.


கொலைகார சீடர்கள் மஞ்சள் துணியுடன் தயாராக நின்றனர்.


முகாமுக்கு வெளியே ஆசாத் பதுங்கி இருந்தார்.


துப்பாக்கி சத்தம் நமக்கு கேட்குமா? அதுதான் சிக்னல்!


ஒரு சீடன் சுக்காவை சேது மகராஜ் முன் பவ்யமாக வைத்தான்.
மகான் இப்போது, "புகையிலே கொடு!" என்பார், உடனே ஆசீர்வாதம் ஆரம்பமாகும்!


முகாமுக்கு வெளியே காவல் இருந்த ஒரு கொள்ளையன்,
ஒரு தீப்பொறியை பார்த்தான்!
அங்கே யாரோ இருக்க வேண்டும்! பார்க்கிறேன்!


கையில் கத்தியுடன் அவன் போலீஸ் அதிகாரிகள் இருந்த இடம் போனன்.


அதோ ஒருவன் வருகிருன். சந்தேகப்படுகிருனு?


சிகரெட்டை பற்ற வைக்க வேண்டாம் என்று ஏற்கனவே சொல்லி இருக்கேன்.


அதோ
அருகில் வந்து
விட்டான்.


கவலைப்படாதே!
அவனை சமாளிக்க
எனக்குத் தெரியும்.


முரட்டுக் கொள்ளையன் வந்ததும், ஆசாத் மின்னல் வேகத்தில் பாய்ந்தார்.
கட்!


சரமாரியாக விழுந்த அறைகள் அவனை வீழ்த்தின.
கட்!தடார்..

கூடாரத்தின் உள்—

சிக்னல் கொடுக்க தயார் ஆகு!

கொலையாளிகள் எதிர்பார்த்த "கொலைச் சொல்" கிடைத்தது!

கொஞ்சம் புகையிலை கொண்டு வா!

உடனே கொலைகாரர்கள் நாணயம் முடிக்கப்பட்டு இருந்த மஞ்சள் துணியை எடுத்தனர். ஆனால்—

உம்... அங்கேயே நில்லுங்க!

எல்லோரும் அந்த மஞ்சத் துணியை கீழே போடுங்க!


எதிர்பாராத திருப்பத்தால் அந்தக் கொள்ளைக் கூட்டம் திணறியது.
ஆத்திரத்தில் சேது எழுந்துகொண்டான்.


அடுத்த கணம் விளக்கு அணைந்தது!
டமீல்!
ஆ!


கூடாரத்துக்கு வெளியே—
கூடாரத்தை சுற்றி வளையுங்க! சீக்கிரம்!


உடனே மறைந்திருந்த போலீசார் பாய்ந்தனர்.
டுமீல்!
டுமீல்!


ஆசாத் அடுத்த நடவடிக்கைக்காக காத்து இருந்தார்.
அப்போது மரணம் நெருங்குவதை அவர் அறியவில்லை!


கூடாரத்துக்குள் பயங்கர சண்டை.
ஆ!
கும்!


ஆ!
டுமீல்!
கூடாரத்தில் இருந்து ஓடிவந்த ஒருவனை ஆசாத் சுட்டார்.


திடீர் என்று—


இதுதான் உனக்கு கடைசி!
சேது, ஆசாத் கழுத்தைச் சுற்றி ஒரு மஞ்சள் துணியை போட்டு இறுக்கினான்.


கூடாரத்தினுள்—
ஆ!
விடாதே!
கொள்ளையர் சிதறி ஓட ஆரம்பித்தனர்.


டங்!


ஆனால் அவர்களை போலீசார் மடக்கிப் பிடித்தனர்.
சேதுவை எங்கே? அவனை தேடுங்க!


போலீசாரே! நில்லுங்க!
சத்தம் வந்த திசையில் அனைவரும் திரும்பினர்.


எனது சீடர்களை விடுவியுங்க! இல்லே, இன்ஸ்பெக்டர் ஆசாத் தலையை குண்டுகள் துளைக்கும்!

தற்கொலை படையினர் திகைத்தனர்.






தற்கொலை படைத் தலைவர் உத்தரவிட்டார்.

கொள்ளையர் அனைவரும் விடுதலை ஆனார்கள்.




ஆமாம்! துப்பாக்கிகளை எல்லாம் கீழே போடுங்க!




அங்கே எஸ். பி. கையில் துப்பாக்கியுடன் நின்றுகொண்டு இருந்தார்.
யாரும் அசையக்கூடாது. அசைந்தால் சுட்டுத் தள்ளுவேன்!


அடுத்த சில நிமிடங்களில் எல்லா கொள்ளையரும் போலீஸ் வேனில் ஏற்றப்பட்டனர்.
எஸ். பி. சார்! என் உயிரைக் காப்பாற்றியதற்கு நன்றி!
இப்படி ஏதாவது ஆபத்தில் மாட்டிக்கொள்வாய் என்று எனக்குத் தெரியும். அதனால்தான் வந்தேன்!


தவிர, நீ என் வருங்கால மருமகன் அல்லவா?
முற்றும்

# ரூ. 50- பரிசு: கருத்துப் போட்டி -12

"ராட்சத பல்லி" சித்திரக் கதையை படித்துவிட்டீர்கள் அல்லவா? இனி இந்தக் கதையில், உங்கள் மனதைக் கவர்ந்த சம்பவம் எது? அதற்கான காரணம் என்ன? என்று உங்கள் கருத்தை, "ராணி காமிக்ஸ்", ஒரு பக்க அளவுக்கு மிகாமல், எழுதி அனுப்புங்கள்.

மிகச் சிறந்த கருத்துக்கு ரூ. 50 பரிசு வழங்கப்படும்.

தேர்ந்து எடுக்கப்பட்ட கருத்து, 15–5–85 இதழில் பிரசுரிக்கப்படும்.

கருத்துப் போட்டி நிபந்தனைகள்:—

(1) கருத்துக்கள் எங்களுக்கு வந்து சேரவேண்டிய கடைசி தேதி 25–4–85. அதன்பின் வரும் கருத்துக்கள் போட்டிக்கு ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா.

(2) போட்டியில் கலந்து கொள்பவர்களுக்கு வயது வரம்பு கிடையாது.

(3) போட்டியில், ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. சட்டப்படி கட்டுப்படுத்த முடியாது.

(4) கீழே உள்ள பாரத்தை பூர்த்தி செய்து, "கருத்து"டன் சேர்த்து அனுப்ப வேண்டும். அது இல்லாமல் வரும் கருத்துக்கள் ஏற்றுக்கொள்ளப் படமாட்டா.




கருத்துப் போட்டி எண்: 12

பெயர்: ........................................

முகவரி: ........................................

........................................

........................................

........................................

முகவரி:—
கருத்துப் போட்டி,
"ராணி காமிக்ஸ்",
1091, பெரியார்
நெடுஞ்சாலை,
சென்னை–600 007.

போட்டி நிபந்தனைகளுக்கு கட்டுப்படுகிறேன்.

........................................

(கையொப்பம்)

RANI COMICS
(TAMIL FORTNIGHTLY)

Regd. No. TN/MS(N)/461

# ராணி காமிக்ஸ்

அடுத்த இதழில்...!

ஜேம்ஸ் பாண்ட்
துப்பறியும்,





# தங்கராஜா!

முழு நீள சித்திரக் கதை!

மற்றும்

சித்ரா மணாளன் எழுதும், அணைக்கட்டு கொலைகள்!

மர்ம பேய்த் தொடர்கதை!




ரூ. 50 பரிசு : வாசகர் போட்டி!

படிக்கத் தவறாதீர்கள்!

1.5.85-ல் வெளிவருகிறது

PRINTED AT RANI PRINTERS, MADRAS-7